05304



ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**14 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)
General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)

කතෝලික ධර්මය I, II
கத்தோலிக்கத் திருமறை I, II
Catholicism I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## கத்தோலிக்கத் திருமறை I

**அறிவுறுத்தல்கள் :**

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக. வினாத்தாள் **I** இற்குரிய புள்ளிகள் **40** ஆகும்.
* **1** தொடக்கம் **40** வரையுள்ள வினா ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
* **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள ஏனைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

**1.** பழைய ஏற்பாட்டில் மக்களால் விரும்பப்படுகின்ற ஒரு நூல்
(1) யோபு (2) ஏசாயா (3) எஸ்தர் (4) தானியேல்

**2.** புனித பவுல் தன் கைப்பட எழுதிய இரு திருமுகங்களாவன,
(1) எபேசியர் மற்றும் எபிரேயர் ஆகும். (2) கலாத்தியர் மற்றும் பிலிப்பியர் ஆகும்.
(3) உரோமையர் மற்றும் பேதுரு ஆகும். (4) பிலமோன் மற்றும் யாக்கோபு ஆகும்.

**3.** "இறை அன்பினதும் இயேசு கிறிஸ்துவின் கீழ்ப்படிதலினதும் அடையாளம் சிலுவை" எனக் குறிப்பிட்டவர்
(1) புனித யூதா ஆவார். (2) புனித பவுலடிகள் ஆவார்.
(3) புனித யாக்கோபு ஆவார். (4) புனித யோவான் ஆவார்.

**4.** கிபயோனில் கடவுளாம் ஆண்டவர் சாலமோன் அரசனுக்குக் கனவில் தோன்றியபோது, அரசன் கடவுளிடம் கேட்டது
(1) குழந்தைப்பேறு ஆகும். (2) நீண்ட ஆயுள் ஆகும்.
(3) செல்வமாகும். (4) ஞானம் நிறைந்த உள்ளமாகும்.

**5.** இயேசு சிலுவை மரத்திலிருந்து கூறிய, "தந்தையே உம் கையில் என் உயிரை ஒப்படைக்கிறேன்" என்பதனைக் குறிப்பிடும் நற்செய்தியாளர்
(1) புனித லூக்கா ஆவார். (2) புனித மாற்கு ஆவார்.
(3) புனித யோவான் ஆவார். (4) புனித மத்தேயு ஆவார்.

**6.** திருச்சபையின் பிறந்த நாளாகக் கொள்ளப்படுவது,
(1) பெந்தகோஸ்தே தினமாகும். (2) நத்தார் தினமாகும்.
(3) பெரிய வியாழக்கிழமையாகும். (4) பாஸ்கா ஞாயிறு தினமாகும்.

**7.** பன்னிரு திருத்தூதர்கள் மத்தியில் முதல் மறைசாட்சியானவர்,
(1) புனித யோவான் ஆவார். (2) புனித யாக்கோபு ஆவார்.
(3) புனித பேதுரு ஆவார். (4) புனித பிலிப்பு ஆவார்.

**8.** புனித பவுல் சார்ந்த கோத்திரம்,
(1) லேவி ஆகும். (2) யூதா ஆகும். (3) ரூபன் ஆகும். (4) பென்ஜமின் ஆகும்.

[பக். 2 ஐப் பார்க்க

9. மூன்றாவது தூதுரைப் பயணத்தின் பின்பு புனித பவுல் தங்கியிருந்தது.
(1) கலாத்தியில் ஆகும்.
(2) எருசலேமில் ஆகும்.
(3) அந்தியோக்கியாவில் ஆகும்.
(4) தெசலோனிக்காவில் ஆகும்.

10. பின்வருவனவற்றுள் புனித பேதுருவினால் வெளிப்படுத்தப்பட்ட கூற்றுகளை மாத்திரம் கொண்ட தெரிவு
A - "நீர் ஆட்சியுரிமை பெற்றுவரும்போது என்னையும் நினைவிற் கொள்ளும்."
B - "எனக்கு உம்மீது அன்பு உண்டு என்பது நீர் அறியாதது ஒன்றா?"
C - "ஆயினும் உமது சொற்படியே வலைகளைப் போடுகிறேன்."
D - "விண்ணரசின் திறவுகோல்களை நான் உன்னிடம் தருவேன்."
(1) A, B
(2) A, C
(3) B, C
(4) B, D

11. ஏழாம் புவனேகபாகு மன்னனின் வேண்டுகோளின்படி கி.பி. 1543 இல் இலங்கைக்கு வருகை தந்த மறை போதகக் குழுவினர் சார்ந்த துறவற சபை
(1) இயேசு சபையாகும்.
(2) அகுஸ்தினார் சபையாகும்.
(3) டொமினிக்கன் சபையாகும்.
(4) பிரான்சிஸ்கன் சபையாகும்.

12. இலங்கைத் திருச்சபை வரலாற்றினைப் பிரிக்கும் பிரதான காலப்பகுதிகள்
(1) 3 ஆகும்.
(2) 4 ஆகும்.
(3) 5 ஆகும்.
(4) 6 ஆகும்.

13. கத்தோலிக்க திருவழிபாட்டின் ஊற்றும் உச்சியும் உரிமையாவது.
(1) குருத்துவத்திற்கு ஆகும்.
(2) திருமுழுக்கிற்கு ஆகும்.
(3) மெய்விவாகத்திற்கு ஆகும்.
(4) திவ்விய நற்கருணை ஆண்டவருக்கு ஆகும்.

14. "அவர் பலியாகப் படைத்த இரத்தம் வெள்ளாட்டுக் கிடாய்கள் கன்றுக்குட்டிகள் ஆகியவற்றின் இரத்தம் அல்ல. அவரது சொந்த இரத்தமே. அவர் ஒரே ஒரு முறை தூயகத்திற்குள் சென்று, எக்காலத்திற்குமென அதைப் படைத்து நமக்கு என்றுமுள்ள மீட்பு கிடைக்கும்படி செய்தார்" எனக் குறிப்பிடப்படும் திருமுகம் எழுதப்பட்டது
(1) எபிரேயருக்காகும்.
(2) கலாத்தியருக்காகும்.
(3) கொரிந்தியருக்காகும்.
(4) தெசலோனிக்கருக்காகும்.

15. அருளாளர் யோசேவாஸ் அடிகளார், அருளாளர் நிலைக்கு உயர்த்தப்பட்டது
(1) திருத்தந்தை முதலாம் பிரான்சிஸ் அவர்களால் ஆகும்.
(2) திருத்தந்தை முதலாம் அருளப்பர் சின்னப்பர் அவர்களால் ஆகும்.
(3) திருத்தந்தை இரண்டாம் அருளப்பர் சின்னப்பர் அவர்களால் ஆகும்.
(4) திருத்தந்தை பதினாறாம் பெனடிக் அவர்களால் ஆகும்.

16. "தந்தையரே உங்கள் பிள்ளைகளுக்கு எரிச்சலை மூட்டாதீர்கள். மாறாக அவர்களை ஆண்டவருக்கு ஏற்ற முறையில் கண்டித்துத் திருத்தி அறிவு புகட்டி வளர்த்து வாருங்கள்" என்ற பகுதி எடுக்கப்பட்டது.
(1) நீதிமொழிகள் நூலிலிருந்தாகும்.
(2) சபை உரையாளர் நூலிலிருந்தாகும்.
(3) கொலோசையருக்கு எழுதிய திருமுகத்திலிருந்தாகும்.
(4) எபேசியருக்கு எழுதிய திருமுகத்திலிருந்தாகும்.

17. ஒப்புரவு அருளடையாளத்தில் மன்னிப்பு வழங்குவதற்காக குருவானவர் தமது ஆயரிடம் விசேட அனுமதி பெற்றுக்கொள்ளவேண்டிய பாவம்
(1) கருக்கலைப்பாகும்.
(2) ஏழைகளைப் புறக்கணித்தலாகும்.
(3) தொற்றுநோய்களைப் பரப்புதலாகும்.
(4) தற்கொலை செய்துகொள்ள முயற்சித்தலாகும்.

18. புனித பவுல் எடுத்துக்காட்டுவதன்படி, ஒருவர் தம் உடலுக்கு எதிராகச் செய்யும் பாவம்
(1) பொய் சொல்லுதல் ஆகும்.
(2) களவு ஆகும்.
(3) கோபம் ஆகும்.
(4) பரத்தமையாகும்.

19. ஏழாம், பத்தாம் கட்டளைகளுக்கு எதிரான பாவமாவது.
(1) பெற்றோரைப் பேணாதிருத்தல்
(2) ஒழுக்கத்திற்கு மாறாகச் செயற்படுதல்
(3) பிறருடைய நேரத்தை விணாக்குதல்
(4) வேறு தெய்வங்களை வணங்குதல்

[பக். 3 ஐப் பார்க்க

05304

20. இயேசு ஒப்புக்கொடுத்த 'உன்னத குருவின் செபத்தில்' அடங்கியுள்ள சீடர்களுக்காகச் செய்யப்பட்ட செபத்தின் மூலம் எதிர்பார்க்கப்படுவது,
(1) அவர்களைப் பாதுகாக்க வேண்டுமென்பதாகும்.
(2) அவர்களுக்கு வழிகாட்ட வேண்டுமென்பதாகும்
(3) அவர்களுடைய குற்றங்களை மன்னிக்க வேண்டுமென்பதாகும்.
(4) அவர்களின் எண்ணிக்கை அதிகரிக்க வேண்டுமென்பதாகும்.

21. அறிவுரைப் பாணியில் அமைந்த மொழிநடையில் காணப்படும் இறையியல் மரபு யாது?
(1) யாவே மரபு (2) எலோகிம் மரபு (3) இணைச்சட்ட மரபு (4) குருக்கள் மரபு

22. இணைத்திருமுறை நூல்கள் மட்டும் குறிப்பிடப்படும் விடையைத் தெரிவுசெய்க.
(1) யூதித்து, தோபித்து, பாரூக்கு மற்றும் சபை உரையாளர்
(2) யூதித்து, பாரூக்கு, திருப்பாடல்கள் மற்றும் யோபு
(3) யூதித்து, தோபித்து, அரசர்கள் மற்றும் சாலமோனின் ஞானம்
(4) யூதித்து, பாரூக்கு, நீதிமொழிகள் மற்றும் நெகெமியா

23. பின்வரும் பண்புகளில் எழுத்து வடிவம் பெறாத இறைவாக்கினர்களின் பண்புகளை மாத்திரம் கொண்ட தெரிவு யாது?
A - தியானத்தில் ஆழ்ந்திருத்தல்
B - செருபிகள் மூலம் செயற்படுதல்
C - குழுவாகப் பணிசெய்தல்
D - தனி ஆளாக மட்டும் பணியில் ஈடுபடுதல்
(1) A, B (2) A, C (3) A, D (4) B, C

24. இறைவனின் செய்தி, அடையாளம் மூலம் யாருக்கு வழங்கப்பட்டது?
(1) மீக்கா இறைவாக்கினருக்காகும். (2) எலியா இறைவாக்கினருக்காகும்.
(3) எசாயா இறைவாக்கினருக்காகும். (4) எசேக்கியேல் இறைவாக்கினருக்காகும்.

25. புனித மாற்குவின் நற்செய்தி ஆரம்பிப்பது,
(1) திருமுழுக்கு யோவான் பாலைநிலத்தில் ஆற்றிய போதனையுடன் ஆகும்.
(2) இயேசுவின் மறைத்தூதுப் பணியுடன் ஆகும்.
(3) செக்கரியாவின் பலி ஒப்புக்கொடுத்தலுடன் ஆகும்.
(4) இயேசுவின் பரம்பரையை முன்வைப்பதுடன் ஆகும்.

26. செபத்தின் மூலம் அல்லது மற்றவர்களுக்கு உதவுவதன் மூலம் இறை அனுபவத்தைப் பெற்றுக்கொள்ள எமக்கு அழைப்பு விடுக்கும் நற்செய்தி எது?
(1) புனித மாற்கு நற்செய்தி (2) புனித மத்தேயு நற்செய்தி
(3) புனித லூக்கா நற்செய்தி (4) புனித யோவான் நற்செய்தி

27. "நீ மண்ணில் பயிரிடும் பொழுது அது இனிமேல் உனக்குப் பலன் தராது." இவ்வாறு இறைவனால் யாருக்குக் கூறப்பட்டது?
(1) காயினுக்கு ஆகும். (2) ஆதாமுக்கு ஆகும்.
(3) மோசேக்கு ஆகும். (4) ஆபேலுக்கு ஆகும்.

28. இறைவன் மோசேக்குக் காட்சி கொடுத்தது,
(1) உயிருள்ள ஒரு பிராணியாக ஆகும்.
(2) காரிருளாக ஆகும்.
(3) எரியும் முட்செடியின் நெருப்புச் சுவாலையாக ஆகும்.
(4) வானதூதர் ஒருவராக ஆகும்.

29. எகிப்தியர் முகம்கொடுத்த பத்துத் துன்பங்களில் இறுதி இரண்டும் யாவை?
(1) தவளைகள் பெருக்கம் - தண்ணீர் இரத்தமாதல் (2) கொசுக்களின் தொல்லை - தலைமகன் சாவு
(3) கொப்புளங்கள் தோன்றுதல் - கல்மழை (4) காரிருள் உண்டாதல் - தலைமகன் சாவு

30. இஸ்ராயேல் மக்கள் .................................. வழியாக இறைமக்களானது போல நாமும் .................................. வழியாக இறைபிள்ளைகளாகிறோம். வெற்றிடத்திற்குப் பொருத்தமான விடைகள் முறையே குறிப்பிடப்படும் தெரிவு
(1) சீனாய் உடன்படிக்கை, திருமுழுக்கு (2) சீனாய் உடன்படிக்கை, உறுதிப்பூசுதல்
(3) திருமுழுக்கு, சீனாய் உடன்படிக்கை (4) விருத்த சேதனம், சீனாய் உடன்படிக்கை

[பக். 4 ஐப் பார்க்க

31. நீதி, சமத்துவம் ஆகியன பற்றித் துணிவுடன் பேசியதால் யாருக்கு இறப்பு ஏற்பட்டது?
(1) யோனா இறைவாக்கினருக்கு (2) எசேக்கியேல் இறைவாக்கினருக்கு
(3) ஆபேலுக்கு (4) திருமுழுக்கு யோவானுக்கு

32. பணப்பையோ வேறு பையோ மிதியடிகளோ எடுத்துச்செல்ல வேண்டாம் என இயேசு தமது சீடர்களுக்கு அறிவுரை வழங்கியது, மறைத்தூதுரைப் பணியில் ஈடுபடுவோருக்குக் கிடைக்கும் .................... எடுத்துக்காட்டுவதற்காகும்.
(1) வழிகாட்டுதலை (2) ஆன்மீக சுகத்தை
(3) இறைபராமரிப்பை (4) இறை புகழ்சியை

33. புனித லூக்கா நற்செய்தியில் 17/20-25 இன் படி இறை அரசு
(1) எம் மத்தியில் உள்ளது. (2) ஏழைகள் மத்தியில் உள்ளது.
(3) ஒதுக்கப்பட்டோர் மத்தியில் உள்ளது. (4) செல்வந்தர் மத்தியில் உள்ளது.

34. திருமணம் என்னும் அருளடையாளத்தின் வெளி அடையாளமாக விளங்குவது என்ன?
(1) திருத்தைலம் (2) திருமண ஒப்பந்தம்
(3) மோதிரம் மாற்றுதல் (4) மாலை அணிவித்தல்

35. "மனம் மாறத் தேவையில்லாத தொண்ணூற்றொன்பது நேர்மையாளர்களைக் குறித்து உண்டாகும் மகிழ்ச்சியை விட மனம் மாறிய .................................... உண்டாகின்றது."
புனித லூக்கா 15:7 இன் படி வெற்றிடத்திற்குப் பொருத்தமான விடை யாது?
(1) ஒரு மனிதனுக்குள் நன்மை
(2) ஒரு பாவியைக் குறித்து விண்ணுலகில் மிகுதியான மகிழ்ச்சி
(3) ஒருவருக்கு இறைவனோடு நட்புறவு
(4) ஒருவருக்கு இறைவனின் பிள்ளையாக மகிழ்ச்சி

36. துறவற வாழ்வின் பண்புகளை மாத்திரம் கொண்ட தெரிவு யாது?
(1) கற்பு, கீழ்படிதல், ஏழ்மை
(2) கற்பு, குழு வாழ்வு, தவவாழ்வு
(3) குழு வாழ்வு, ஏழ்மை, பணி வாழ்வு
(4) குழு வாழ்வு, செப வாழ்வு, பணி வாழ்வு

37. கிறிஸ்துநாதரால் திருத்தூதர்களுக்குக் கொடுக்கப்பட்ட மறைத்தூதுரைப் பணியை ஏற்றுக்கொண்ட கிறிஸ்தவர்களுக்குக் கிடைத்தது,
(1) பணிக் குருத்துவமாகும். (2) பொது குருத்துவமாகும்.
(3) இறைவாக்குப் பணியாகும். (4) மேய்ப்புப் பணியாகும்.

38. இயேசு கிறிஸ்து நமக்குக் காட்டும் அன்புக்குப் பிரதி அன்பு காட்ட அவரால் நிறுவப்பட்டு, தூய ஆவியின் பிரசன்னத்தில் தொடர்ந்து நிலவும் மாபெரும் பொதுநிலையினரின் அப்போஸ்தலிக்க சபை
(1) புது வாழ்வு இயக்கம்
(2) இயேசுவின் திரு இருதய சபை
(3) இளம் கத்தோலிக்க மாணவர் இயக்கம்
(4) வின்சன் டி போல் சபை

39. மரியாளின் இவ்வுலக வாழ்வின் இறுதியில் இறைவன் அவரை விண்ணகத்திற்கு எடுத்துக்கொண்டமை
(1) மனித அவதாரம் எனப்படும். (2) விண்ணேற்பு எனப்படும்.
(3) விண்ணேற்றம் எனப்படும். (4) மாசில்லா உற்சவம் எனப்படும்.

40. மரியாள் பதினெட்டு முறை காட்சியளித்து செபமாலைப் பக்தியின் மாண்பை வெளிப்படுத்தியது,
(1) லூர்து நகரில் லூசியாவிற்காகும்.
(2) பாத்திமா நகரில் பெர்ணதேத்திற்காகும்.
(3) லூர்து நகரில் பெர்ணதேத்திற்காகும்.
(4) பாத்திமா நகரில் ஜசிந்தாவிற்காகும்.

* *

05304





ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**14 | T | I, II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021 (2022)
General Certificate of Education (Ord. Level) Examination, 2021 (2022)

කතෝලික ධර්මය I, II
**கத்தோலிக்கத் திருமறை I, II**
Catholicism I, II

## கத்தோலிக்கத் திருமறை II

* **முதலாம்** வினாவுக்கும் மேலும் **நான்கு** வினாக்களுக்குமாக மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
* முதலாம் வினாவுக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவுக்கும் **10** புள்ளிகளும் உரித்தாகும்.

**1.** (i) திருத்தூதர் பணிகள் நூலின் அமைப்பு முறையில் **இரண்டினை** எழுதுக.
(ii) திருச்சபையில் நிலவ வேண்டிய கட்டாய பண்புகள் **இரண்டினைக்** குறிப்பிடுக.
(iii) திவ்வியநற்கருணை உணவில் அருளடையாள வடிவில் நாம் பெற்றுக்கொள்பவை யாவை என எழுதுக.
(iv) நிலமொன்றை விற்றுப் பெற்றுக்கொண்ட பணம் தொடர்பாகப் புனித பேதுருவை ஏமாற்றியதன் காரணமாக இறந்த **இருவரினதும்** பெயர்களைத் தருக.
(v) பீடத்தை ஆயத்தம் செய்யும் சடங்கின் உப பிரிவுகள் **இரண்டினையும்** எழுதுக.
(vi) இறைவன் ஆபிரகாமோடு செய்துகொண்ட உடன்படிக்கையின் பிரதான விடயங்கள் **இரண்டினையும்** எழுதுக.
(vii) திருமுழுக்கின்போது வெளிப்படுத்தப்படும் வார்த்தைப்பாடுகள் **இரண்டினையும்** எழுதுக.
(viii) இறை ஆட்சியின் மதிப்பீடுகள் பற்றிக் குறிப்பிடப்படும் உவமைகள் **இரண்டினைக்** குறிப்பிடுக.
(ix) ஒருசந்தி அனுசரிப்பதன் நோக்கங்கள் **இரண்டினை** எழுதுக.
(x) திருவழிபாட்டு ஆண்டில் இறை அன்னையின் திருவிழாக்கள் **இரண்டினைக்** குறிப்பிடுக.

**2.** (i) கத்தோலிக்கத் திருச்சபை பின்பற்றும், கற்பிக்கும் படிப்பினைகளைப் பெற்றுக்கொள்ளும் மூலங்கள் **இரண்டினையும்** குறிப்பிடுக.
(ii) பஞ்சாகமத்தைச் சேர்ந்த நூல்கள் **மூன்றின்** பெயர்களைத் தருக.
(iii) நீர் ஒரு தலைவராகச் செயற்படும் முறையை பத்துக்கட்டளைகளில் எவையேனும் **ஐந்துடன்** தொடர்புபடுத்தி விளக்குக.

**3.** (i) பெந்தகோஸ்து விழாவின்போது யூதர்களால் நிறைவேற்றப்பட்ட விசேட செயல்கள் **இரண்டினை** எழுதுக.
(ii) தொடக்கத் திருச்சபையின் சிறப்பான பண்புகள் **மூன்றினை** எழுதுக.
(iii) உமது ஆலயத் திருவிழாவின்போது உம்மால் நிறைவேற்றக்கூடிய நற்செயல்கள் **ஐந்தினைச்** சுருக்கமாக விளக்குக.

**4.** (i) கெத்சமனி செபத்தின் மூலம் எடுத்துக்காட்டப்படும் **இரண்டு** விடயங்களை எழுதுக.
(ii) கெத்சமனி தோட்டத்தில் தம்முடன் இருந்து செபிக்கும்படி இயேசுவிடம் அறிவுரை பெற்றுக்கொண்ட திருத்தூதர்கள் **மூவரினதும்** பெயர்களை எழுதுக.
(iii) பாவச் சோதனைகளை வெற்றிகொள்வதற்குத் தேவையான சக்தியை வேண்டி செய்யப்படும் தனிச் செபமொன்றில் உள்ளடங்க வேண்டிய விடயங்கள் **ஐந்தினை** எழுதுக.

**5.** (i) திருமுழுக்கு யோவானைப் பற்றி பழைய ஏற்பாட்டில் மலா 3:1 இலும் புதிய ஏற்பாட்டில் லூக்கா 1:16 இலும் குறிப்பிடப்படும் விடயங்கள் **இரண்டினையும்** எழுதுக.
(ii) திருமுழுக்கு யோவானிடம் அறிவுரை பெற்ற குழுவினருக்கு, அவர் வழங்கிய அறிவுரைகள் **மூன்றை** எழுதுக.
(iii) திருமுழுக்கு யோவானின் வாழ்க்கையிலிருந்து இன்றைய சமுதாயத் தலைவர்கள் எடுத்துக் கொள்ளக்கூடிய முன்மாதிரிகள் **ஐந்தினை** விவரிக்குக.

[பக். 6 ஐப் பார்க்க

6\. (i) புனித மத்தேயு 5:44 இன் படி விண்ணகத்திலிருக்கும் உங்கள் தந்தையின் மக்களாவதற்குச் செய்ய வேண்டிய செயல்கள் **இரண்டினை** எழுதுக.

(ii) போரை வெறுத்தல் பற்றி கத்தோலிக்க திருச்சபை கற்பிக்கும் விடயங்கள் **மூன்றினைக்** குறிப்பிடுக.

(iii) தற்கால சமுதாயத்தை 'அமைதியின் பாதையை நோக்கிக்' கொண்டு செல்வதற்காகச் செய்யக்கூடிய செயல்கள் **ஐந்தினை** விவரிக்குக.

7\. பின்வரும் தலைப்புகளில் எவையேனும் **இரண்டினைத்** தெரிவுசெய்து சிறுகுறிப்பு எழுதுக.

(i) புதிய ஏற்பாட்டில் பாஸ்கா உணவு

(ii) உன் தாயையும் தந்தையையும் மதித்து நட

(iii) இறை ஆட்சியின் மதிப்பீடுகள் மூலம் இலங்கையின் ஒழுக்க விழுமியங்களைக் கட்டியெழுப்புவோம்.

(iv) குணமளிக்கும் அருளடையாளங்கள்

* * *